# திருப்புகழமிர்தம்

கீலக

வைகாசி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89 சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற் கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச் செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிடப்பட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

### கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றது. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறுநேர இடமில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அந்தந்த ஆங்கில மாத முடிவுக்குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் விதம் செலுத்தியே பெறலாம். குறிப்பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அநுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்க வில்லையென்று எழுதினால் கவனிக்கப் படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெறாத நிலையில் உள்ளவர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர் திருப்புகழமிர்தம்.

உ

ஓம் குஹாய நம ।



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஹு—வைகாசி மீ மே 1968 | இதழ் 2

## திருவானைக்கா

## திருப்புகழ்

ஆரமணி வாரைப் பீறியற மேலிட்
டாடவர்கள் வாடத் துறவோரை
ஆசைமட லூர்வித் தாளுமதி பாரப்
பாளித படீரத் தனமானார்

காரளக நீழற் காதளவு மோடிக்
காதுமபி ராமக் கயல்போலக்
காலனுடல் போடத் தேடிவரு நாளிற்
காலைமற வாமற் புகல்வேனோ

பாரடைய வாழ்வித் தாரபதி பாசச்
சாமளக லாபப் பரியேறிப்
பாய்மதக போலத் தானெடிக லாமுற்
பாடிவரு மேழைச் சிறியோனே

சூரர்புர சூறைக் காரசுரர் காவற்
காரஇளவேனற் புனமேவுந்
தோகைதிரு வேளைக் காரதமிழ் வேதச்
சோதிவளர் காவைப் பெருமாளே.

## பதவுரை

பார்அடைய வாழ்வித்த = உலக முழுவதும் தாங்கி வாழ்விக்கும், ஆரபதி = நாகராஜனான ஆதிசேடனை, பாச = தனது காலில் கட்ட வல்ல, சாமள கலாப = பச்சை நிறத் தோகையுடைய, பரி ஏறி = மயிலின்மீது ஏறி, பாய் மதகபோலத்தானொடு இகலா = மதம் பாய் கின்ற மத்தகத்தையுடைய விநாயகருடன் மாறுபட்டு, முன் பாடி வரும் = முன்னொருகாலத்தில் உலகத்தை வளைந்தோடி வந்த, ஏழை சிறியோனே = இளங்குழந்தையே! சூரர் புரம் = சூரர்களுடைய ஊர் களை, சூறைக்கார = சூறையாடியழித்தவரே! சுரர்காவல்கார = தேவர் களுக்குப் பாதுகாப்பாக இருப்பவரே! இள ஏனல் புனம் மேவும் = பசுந்தினைப் புனத்தில் இருந்த, தோகை திருவேளைக்கார = மயில் போன்ற வள்ளிநாயகியுடன் இனிது பொழுது போக்குபவரே! தமிழ் வேத சோதிவளர் = தமிழ் வேதங்களால் பாடப்பெற்றசிவபெருமான் உறைகின்ற, காவை பெருமாளே = திருவானைக்காவில் வாழ்கின்ற பெருமையிற் சிறந்தவரே! ஆரம் அணி = மணிவடம் அணிந்துள்ள, வாரை பீறி அற மேலிட்டு = இரவிக்கையைக் கிழித்துக்கொண்டு மிகவும் வெளிப்பட்டுத் தோன்றி, ஆடவர்கள் வாட = ஆண்களை வாட்டியும், துறவோரை = துறவிகளை, ஆசை மடல் ஊர்வித்து ஆளும் = ஆசை மயக்கத்தால் மடல் ஏறும்படிச் செய்து ஆளவல்ல தாய், அதி பார = அதிக பாரங் கொண்டதாய், பாளித படீர = பச்சைக் கர்ப்பூரம் சந்தனம் இவைகளை அணிந்ததான, தன மானார் = கொங்கையை யுடைய மாதர்களின், கார் அளக நீழல் = மேகம் போன்ற கரிய கூந்தலின் நிழலிலே, காது அளவும் ஓடி = காதுவரைக்கும் நீண்டு, காதும் = கொல்லுந் தொழிலையுடைய, அபிராம கயல் போல = அழகிய கண்கள் போல கொலைத் தொழிலை மேற்கொண்ட, காலன் = காலனானவன், உடல் போட = என் உடலை விட்டு உயிரைப் பிரிக்க, தேடிவரும் நாளில் = தேடிவருகின்ற அந்நா ளில், காலை = உமது திருவடியை, மறவாமல் புகல்வேனோ = மறக்கா மல் துதிக்கப் பெறுவேனோ ?

## பொழிப்புரை

உலக முழுவதும் பணமகுடத்தில் தாங்கி வாழ்விக்கும் நாக ராஜனாகிய ஆதிசேடனைத் தனது காலில் கட்டவல்ல, பச்சைத் தோகையுடைய மயிலின்மீது ஏறி, மதம் பாய்கின்ற மத்தகத்தை யுடைய விநாயகருடன் மாறுபட்டு, உலக முழுவதும் வளைந் தோடி வந்த இளங் குழந்தையே! சூராதியவுணர்களுடைய நகரங்களைச் சூறையாடி யழித்தவரே! தேவர்கட்குப் பாதுகாப் பாக இருப்பவரே! பசுந் தினைப்புனத்தில் வாழ்ந்த மயில்போன்ற வள்ளி நாயகியுடன் இனிது காலங் கழிப்பவரே! தமிழ் வேதச் சோதியாம் சிவபிரான் உறைகின்ற திருவானைக்காவில் எழுந்

தருளியுள்ள பெருமிதம் உடையவரே! மணிவடங்கள் அணிந்த இரவிக்கையைக் கிழித்துக் கொண்டு, மிகவும் வெளிப்பட்டுத் தோன்றி, ஆண்களை வாடச் செய்தும், துறவிகளை ஆசைமுட்டி மடல் ஏறும்படிச் செய்தும் ஆட்சி செய்யவல்லதும், மிகுந்த பாரமுள்ளதும், பச்சைக் கர்ப்பூரத்துடன் சந்தனம் பூசப்பெற்றதுமான தனத்தையுடைய பொது மாதர்களின், மேகம் போன்ற கரிய கூந்தலின் நிழலிலே, காதுவரை நீண்டு, மின்போல் விளங்கி கொல்லும் தன்மையுடைய கண்களைப் போல், கொல்லுந் தொழிலையுடைய காலன் என் உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் பொருட்டு, என்னைத் தேடி வருகின்ற அந்த நாளில், உமது திருவடிகளை மறவாமல் அடியேன் துதிசெய்யப் பெறுவேனே?

## விரிவுரை

**ஆரமணி :—**

ஆரம்—முத்துமணி மாலைகளைப் பெண்கள் தங்கள் மார்பில் ஒளியும் அழகும் செய்ய அணிந்து அலங்கரித்துக் கொள்வார்கள்.

**வாரைப்பீறி அறமேலிட்டு :—**

வார்—இரவிக்கை. விலைமகளிரது தனங்கள் மலைபோல் பணைத்து இரவிக்கையைக் கிழித்துக்கொண்டு மிகவும் தோன்றி மயல் விளைவிக்கும். அற—நன்ருக.

**ஆடவர்கள் வாட :—**

அத்தனங்களைக் கண்டு ஆண்கள் அறிவிழந்து ஆசைக் கனல் மூண்டு வாடி வருந்துவார்கள்.

**துறவோரை ஆசை மடலூர்வித்து :—**

ஆசாபாசங்களை முற்றத்துறந்த முனிவர்களையும் மயக்கி, மடற்பரியேறும்படி மயக்கம் புரியவல்லது மாதராசை.

“விழையுமனி தரையுமுநி வரையுமவர் உயிர்துணிய
வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடும் செங்கண்வேலும்”
—திருப்புகழ்.

“......துறந்தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங் கண்ணூர்”
—கந்தரலங்காரம் (32)

காமுற்றுர் பனைமரத்தில் வாள்போன்ற மடலால் செய்த குதிரைமீது ஏறுவர். இதன் விரிவை, திருப்புகழ் விரிவுரை (5-ம் பாகம்) குன்றுதோருடல் 165-ம் பக்கம் பார்க்கவும்.

**காதளவுமோடிக் காதும் :—**

பெண்களின் கண்கள் காதுவரை நீண்டு அழகு செய்யும். சாமுத்ரிகா லட்சணங்களில் ஒன்று நீண்ட கண்கள். காதுதல்—கொல்லுதல்.

**அபிராமக் கயல்போல :—**

அபிராமம்—அழகு. கயல்—மீன்.

கயல் என்பது இங்கு உவம ஆகு பெயராகக் கண்ணை உணர்த்துகின்றது. கயல் போன்ற பெண்களின் கண்கள் எப்படி ஆடவரைக் கொல்லவல்லதோ? அதுபோல் உயிர்களை வதைப்பவன் காலன் என்று கூறுகின்றார்.

கண்கள் உவமானம். காலன் உவமேயம்.

எப்போதும் உவமேயத்தைக் காட்டிலும் உவமானம் உயர்ந்தது.

**"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை"** —தொல்காப்பியம்.

காலன் போன்ற கண்கள் என்று மற்றவர்கள் கூறுவார்கள். இங்கே அருணகிரிநாதர் ஒரு புரட்சி செய்து, பெண்களின் கண்கள் போன்றவன் காலன் என்கின்றார்.

இப்படி ஒரு புரட்சி இளங்கோவடிகள் செய்தார்.

உலகில் உள்ள கற்புடைய பெண்களுக்கு உவமானமாக அருந்ததியைக் கூறுவது மரபு.

**"வடமீன் புரையும் கற்பின் மடமொழி அரிவை"** —புறநானூறு.

**"வடமீன் போற்றொழு தேத்த வயங்கிய கற்பினாள்"** —கலித்தொகை.

இவ்வாறு புலவர்கள் கற்புக்கு உவமையாக அருந்ததியைக் கூறினார்கள்.

இளங்கோவடிகள் கண்ணகியைக் கூற வந்தபோது, "இந்தக் கண்ணகியின் கற்பினைப் போன்றது அருந்ததியின் கற்பு" என்கின்றார்.

**"தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்"** —சிலம்பு.

இப்படி உயர்ந்த உவமானத்தை உவமேயமாகக் கூறுவது "எதிர்நிலை யணி" என்பர். வடமொழியில் பிரதீபாலங்காரம் என்பர்.

இவ்வாறு புரட்சியாகக் கூறுந்திறம் பெரும் புலவர்கட்குத் தான் உண்டு.

காலனுடல்போடத் தேடிவருநாளில் காலைமறவாமற் புகல்வேனோ :—

இயமனுடைய அமைச்சன் காலன். "காலன் வந்து என் உடம்பிலிருந்து உயிரைப் பிரிக்கின்ற மரண காலத்தில் முருகா! உன் சரணத்தைப் புகழ்ந்து துதிக்கும் ஒரு பெரிய பாக்கியம் எனக்கு உண்டாகுமோ?" என்று அருணகிரிப் பெருமான் முருகனை வேண்டுகின்றார்.

உயிர் போகும்போது இறைவனுடைய நினைவு வருவது அரிது. அது அடியார்கட்கு எளிது. அடியார்கள் இடையறாது இறைவனையே சிந்தித்தவண்ணம் இருப்பார்கள். அதனால் அது சித்திக்கின்றது.

பாரடைய வாழ்வித் தாரபதி :—

பார் அடைய வாழ்வித்த ஆரபதி.

அரபதி என்ற சொல் ஆரபதி என வந்தது. அரபதி—அரா வினங்கட்குத் தலைவனான ஆதிசேடன்.

உலகை முழுவதையும் ஆதிசேடன் தனது ஆயிரம் பணாமகுடங்களில் ஒரு முடியில் தாங்குவான். அத்துணை வலிமையுடையவன்.

"உலகமோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்" —ஔவையார்.

பாச :—

பாசம்—கட்டும் கயிறு. மயில் ஆதிசேடனைத் தன் காலில் கட்டி எடுத்து உதறும்.

உலகத்தையெல்லாம் ஒரு முடியில் தாங்கும் ஆதிசேடனைத் தன் காலால் எடுத்து உதறும் பேராற்றல் படைத்தது மயில்.

சேலில் திகழ்வயல் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணாமுடிதாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கு மாயனும் சக்ராயுதமும் பணிலமுமே.

இது கந்தரலங்காரத்தில் மயிலின் பேராற்றலைக் கூறும் அரிய பாடல்.

மயில் பறந்து சென்று உலாவும்போது திருப்பாற்கடலில் திருமால் ஆதிசேடன் மீது அறிதுயில் புரிந்து கொண்டிருந்தார். மயில் ஆதிசேடனைத் தனது காலால் தூக்கி உதறியது. அதனால் திருமாலும் அவருடைய சங்கு சக்கரங்களும், ஆதிசேடனுடைய ஆயிரம் பணாமகுடங்களில் இருந்த நாகரத்தினங்களும் மயிலின் காலில் சிதறிக் கிடந்தனவாம்.

மயில் அதிசேடனைத் திடும் என்று காலில் எடுத்து உதறியது. அதனால் பாம்பணையில் படுத்திருந்த நாராயணர் உள்ளந் திடுக்கிட்டார். காரணம் சட்டென்று தெரியாது பதறினார். சங்கு சக்கரங்கள் திருக்கரங்களிலிருந்து நழுவின. சிறிது அவச முற்றார்.

அவருடைய திருமார்பில் குடியிருக்கும் இலட்சுமிதேவி திடீர் என்று கணவனாருக்கு உற்ற இந்த பெரிய அதிர்ச்சிதரும் இடர்ப் பாட்டைக்கண்டு, திருமார்பில் வழியும்படி கண்ணீர்விட்டு அழுதாள். நலந்தீது அறியாத இளம் பிள்ளையாக, திருமாலின் திருவுந்தித் தாமரையில் இருந்த பிரமன் என்ற குழந்தை, தன் தாய் தந்தையருக்கு நேர்ந்த பேராபத்தைக் கண்டு அழுதது. இப்படியான ஒரு நிலைமை திடுமென உண்டாகுமாறு செய்து விட்டது ஏறுமயில்.

இதனைத் திருப்புகழ்ச் சுவாமி யென்னும் வண்ணச் சரபம், முருகதாச சுவாமிகள் புதுவைத் பிள்ளைத்தமிழில் கூறுகின்றார்.

நீலக்கிரிபோல் கிடந்துறங்கும்
நெடுமால் பதறி விழித்தலறி
நெஞ்சந் திடுக்கிட் டாழிசங்கம்
நெகிழ்வுற் றவசமுற, உரந்தோய்
சீலக் கமலத் திருமாது
செழுங்கோங் கரும்பாம் முலைநடுவில்
செவ்வேல் விழிநீர் விடுத்திரங்கத்
தீதும் நலமும் தெரியாத
பாலப் பருவம் கொளும் உந்திப்
பங்கேரு கத்தான் அணிமுகத்தைப்
பார்த்துப் பார்த்துக் கதற, அலைப்
பாலாழியில் பாம் பெடுத்துதறும்
கோலச் சிகியில் பவனிவரும்
குகனே தாலோ தாலேலோ
கொடியா டணிமா டப்புதுவை
குமரா தாலோ தாலேலோ.

''நாகபந்த மயூரா நமோநம'' —(நாதவிந்து) திருப்புகழ்

சாமளகலாபப் பரியேறி:—

சாமளம்—பச்சை நிறம். பச்சை மரகதம் போன்ற தோகையுடைய மயிலின்மீது முருகன் ஏறி உலகை வலம் வந்தார்.

பாய்மதகபோலத் தாஞெடிகலா :—

இகல்—மாறுபாடு. கருணை மதம் பொழிகின்ற கபோலத்தை யுடைய யானைமுகக் கடவுளாகிய விநாயகருடன் கனி காரண மாக மாறுபட்டு முருகன் உலகை வலம் வந்த வரலாற்றை இது குறிக்கின்றது.

பாடிவரு மேஏழைச் சிறியோனே :—

பாடிவரல்—வளைந்தோடி வருதல்.

ஏழைச் சிறியோன்—இளங்குழந்தை.

''ஆரமதுரித்த கனி காரண முதற்றமய
ஞருடனு ணக்கைபுரி தீமைக் காரனும்'' —திருவகுப்பு.

''இலகுகனி கடலைபய றொடியல்பொரி யமுதுசெயும்
இலகு வெகு கடவிகட தடபார மேருவுடன்
இகலிமுது திகிரிகிரி நெரியவளை கடல்கதற
எழுபுவியை ஒருநொடியில் வலமாக ஓடுவதும்''
—சீர்பாத வகுப்பு.

சூரர்புர சூறைக்கார :—

சூராதியவுணர்களுடைய நகரங்களை முருகவேள் சூறை யிட்டு அழித்தருளினர்.

''துரிதமிடு நிருதர்புர சூறைக்கார'' —(ஒருபொழுது) திருப்புகழ்.

சூரர் காவற்கார :—

முருகனைத் துதித்துத் தொழும்பு செய்யும் அடியவர்களாகிய அமரர்கட்கு எம்பெருமான் காவற்காரஞக இருந்து தண்ணருள் புரிகின்ருன்.

''தொழுது வழிபடு மடியர் காவற்காரப் பெருமாளே''
—(ஒருபொழுது) திருப்புகழ்.

தோகை திருவேளைக்கார :—

வள்ளி பிராட்டியுடன் முருகன் பொழுது போக்குபவன்.

''விறன்மறவர் சிறுமிதிரு வேளைக்காரப் பெருமாளே''
—(ஒருபொழுது) திருப்புகழ்.

தமிழ்வேதச் சோதி வளர்காவை :—

''தமிழ் வேதத்தையருளிய சோதியே'' என்றும் பொருள் படும்.

தமிழ் வேதம் பெற்ற சிவசோதியாகிய சம்புநாதர் வளர் கின்ற என்றும் பொருள்படும்.

### கருத்துரை

திருவானைக்கா மேவும் திருவேலிறைவா! மரண காலத்தில் உன் சரணத்தை ஓத அருள் செய்.

## திருப்புகழ்

ஆலம் வைத்தவி ழிச்சிகள் சித்தசன்
னுகை மக்கலை கற்றச மர்த்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே
ஆர வட்டமு லைக்குவி லைப்பண
மாயி ரக்கல மொட்டிய ளப்பினு
மாசை யப்பொரு ளொக்கந டிப்பவ ருடன்மாலாய்

மேலி ளைப்புமு சிப்புமவத்தையு
மாயெ டுத்தகு லைப்பொடு பித்தமு
மேல்கொ ளத்தலை யிட்டவி திப்படி யதனாலே
மேதி னிக்குள பத்தனெ னப்பல
பாடு பட்டுபு ழுக்கொள்ம லக்குகை
வீடு கட்டியி ருக்குமெ னக்குநி னருள்தாராய்

பீலி மிக்கம யிற்றுர கத்தினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல்
பீற லுற்றவு யுத்தக ளத்திடை மடியாத
பேர ரக்கரை திர்த்தவ ரத்தனை
பேரை யுக்ரக ளப்பலி யிட்டுயர்
பேய்கை கொட்டிந டிப்பம ணிக்கழு குடனாட

ஏலம் வைத்தபு யத்தி லணைத்தருள்
வேலெ டுத்தச மர்த்தையு ரைப்பவர்
ஏவ ருக்கும னத்தில்நி னைப்பவை யருள்வோனே
ஏழி சைத்தமி ழிற்பய னுற்றவெ
ணாவ லுற்றடி யிற்பயி லுத்தம
ஈசன் முக்கணி ருத்தன ளித்தருள் பெருமாளே.

### பதவுரை

பீலிமிக்க=தோகை மிகுதியாகவுள்ள, மயில் துரகத்தினில் ஏறி=மயிலாகிய குதிரையின்மீது ஆரோகணித்து, முட்டவளைத்து=

அசுரர்கள் அனைவரையும் ஒரு சேர வளைத்து, வகுத்து = அவர்களைக் கூறுபடுத்தி, உடல் பீறல் உற்ற = அவர்களது உடம்புகள் கிழிவுபட்ட, உயுத்தகளத்து இடை = போர்க்களத்தின் கண், மடியாத = இறவாது எஞ்சி நின்ற, பேர் அரக்கர் எதிர்த்தவர் அத்தனை பேரை = பெரிய அரக்கர்கள் எதிர்த்துவந்தவர்கள் அத்தனை பேரையும், உக்ர களப் பலி இட்டு = கடுமையான போரில் மடிவித்து, உயர் பேய்கை கொட்டி நடிப்ப = பெரிய பேய்கள் கைகளைக்கொட்டி நடிக்கவும், மணி கழுகு உடன் ஆட = கரிய கழுகுகள் உடன் ஆடவும், ஏலம் வைத்த புயத்தில் அணைத்து அருள் = வாசனைப் பொருள் மணக்குந் தோளில் அணைத்து வைத்துள்ள, வேல் எடுத்த சமர்த்தை = வேலாயுதத்தை எடுத்துச் செலுத்திய திறமையை, உரைப்பவர் ஏவருக்கும் = புகழ்வோர் யாவருக்கும், மனத்தில் நினைப்பவை அருள்வோனே = அவரவர் மனத்தில் நினைக்கும் விருப்பங்களைப் பூர்த்தி செய்து அருள்பவரே! ஏழ் இசை தமிழின் பயன் உற்ற = ஏழிசைத் தமிழாகிய தேவாரப் பாடல்களின் பயனைக் கொண்ட, வெண் நாவல் உற்று அடியில் பயில் = வெண்ணுவல் மரத்தின் கீழ்விளங்குகின்ற, உத்தம ஈசன் = உத்தமராகிய சிவ பெருமான், முக்கண் நிருத்தன் அளித்து அருள் = மூன்று கண்களை யுடைய கூத்தப்பிரான் பெற்றருளிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! ஆலம்வைத்த விழிச்சிகள் = நஞ்சினைக் கொண்ட கண்ணினர்; சித்தசன் ஆகம கலை கற்ற சமர்த்திகள் = மன்மதனுடைய சாத்திர நூல்களைப் படித்துள்ள சாமர்த்தியசாலிகள்; ஆர்மனத்தையும் எத்தி வளைப்பவர் = எப்படிப்பட்டவருடைய மனத்தையும் வஞ்சனை செய்து தம் வசமாக இழுப்பவர்கள்; தெருவூடே = நடுத்தெருவில் நின்று, ஆரம் வட்ட முலைக்கு = முத்தாரமணிந்த வட்ட வடிவுள்ள கொங்கைகட்கு, விலை பணம் = விலையாகப் பணம், ஆயிர கலம் ஒட்டி அளப்பினும் = ஆயிரக்கலங் கணக்கில் துணிந்து அளந்து கொடுத்தாலும், ஆசை அ பொருள் ஒக்கநடிப்பவர் = தங்கள்ஆசையை கொடுத்த அந்தப் பொருளுக்குத் தக்கவாறே நடித்துப் பழகுபவர்களாகிய பொதுமாதர்கள், உடன் மால் ஆய் = அவர்களுடன் ஆசைபூண்டவனாய், மேல் இளைப்பு = அதற்குப் பின்னர் இளைப்பும், முசிப்பும் = மெலிவும், அவத்தையும் ஆய் = வேதனையும் அடைந்து, எடுத்த குலைப் பொடு = உண்டாகிய நடுக்குவாதத்துடன், பித்தமும் மேல் கொள = பித்தமும் அதிகப்பட, தலை இட்ட விதி படி அதனாலே = தலையில் எழுதிய விதியின்படியாக. மேதினிக்கு உள் = பூதலத்தில், அபத்தன் என = பொய்யன் என்று பேர் பெற்று, பல பாடு பட்டு = பல துன்பங் களை யடைந்து, புழு கொள் மல குகை = புழுக்கள் நிரம்பிய மலக் குகையாகிய, வீடுகட்டி இருக்கும் = இந்த உடம்பாகிய வீட்டை யெடுத்திருக்கும், எனக்கும் = அடியேனுக்கும், நின் அருள் தாராய் = தேவரீருடைய திருவருளைத் தந்தருளுவீராக.

## பொழிப்புரை

தோகை நிரம்பவுள்ள மயிலாகிய குதிரைமீது ஏறி, அசுரர்கள் யாவரையும் ஒருங்கே வளைத்து, அவர்களைக் கூறுபடுத்தி, அவர்களின் உடல்கள் கிழிவுபட்ட போர்க்களத்தின்கண், இறவாது எஞ்சி நின்ற பெரிய அரக்கர்கள் எதிர்த்து வந்தவர்கள் அத்தனை பேரையும் கடுமையான களப்பலியாகக் கொன்று, பெரிய பேய்கள் கைகளைக் கொட்டி நடனஞ் செய்யவும், கரிய கழுகுகள் உடன் ஆடவும், நறுமணப் பொருள்கள் மணக்குந் திருத்தோளில் அணைத்து வைத்துள்ள வேலாயுதத்தைச் செலுத்தியருளிய பேராற்றலைப் புகழ்ந்து துதி செய்வோர்களின் மன விருப்பங்கள் முழுவதையும் பூர்த்தி செய்தருள் புரிபவரே! ஏழிசைத் தமிழாம் தேவாரப் பாடல்களின் பயனைக் கொண்ட வெண்ணாவல் மரத்தினடியில் எழுந்தருளியுள்ள உத்தமரும், மூன்று கண்களையுடையவரும், நடனம் புரிபவருமாகிய சிவபெருமான் பெற்றருளிய பெருமிதமுடையவரே! நஞ்சினைக் கொண்ட கண்ணினர்; மன்மதனுடைய காம நூல்களைக் கற்ற சாமர்த்திய சாலிகள்; எப்படிப்பட்டவர்களுடைய மனத்தையும் வஞ்சனையால் தமது வசமாக வளைத்து இழுப்பவர்கள்; நடுவீதியில் நின்று, முத்தாரமணிந்த வட்டவடிவுள்ள கொங்கைகட்கு விலையாக, ஆயிரக்கலங் கணக்காகப் பணத்தை அளந்து கொடுத்தாலும், கொடுத்த பணத்துக்கு ஏற்றபடி ஆசையைக் காட்டி நடிப்பவர்களான பொதுமாதர்களுடன் ஆசை பூண்டவனாய், பின்னர் இளைப்பு நோயும், மெலிவும் துயரமும் அடைந்து, நடுக்கு வாதமும் பித்தமும் அதிகப்பட, தலைவிதிப்படி, பூமியில் பொய்யன் என்று பேர் பெற்று, பல துன்பங்கள் நுகர்ந்து, புழுக்கள் நிரம்பிய மலக் குகையாம் இந்த உடம்பாகிய வீட்டைக் கட்டிக் கொண்டிருக்கும் அடியேனுக்கும் உமது திருவருளைத் தந்தருளுவீராக.

## விரிவுரை

**ஆலம் வைத்த விழிச்சியர் :—**

பொதுமகளிரது கண்கள் நஞ்சினும் கொடியது. நஞ்சு உண்டாரை மட்டும் கொல்லும்; இக்கண்கள் கண்டாரையும் கொல்லும் வலிமையுடையது. நச்சுக் கண்கள்.

**சித்தச னுகமக்கலை கற்ற சமர்த்திகள் :—**

சித்தசன்—மன்மதன்.

திருமாலின் சித்தத்தில் பிறந்தவன் மன்மதன். சித்தம்—உள்ளம்; ஜன்—பிறந்தவன்.

அதனுல் சித்தஜன் எனப் பேர் பெற்ருன். இந்த மன்மதனுடைய நூல்களாகிய காம சாத்திரங்களை நன்கு படித்த சாமர்த்தியசாலிகள்.

**ஆர்மனத்தையு மெத்தி வளைப்பவர் :—**

எத்தி—ஏமாற்றி. எப்படிப்பட்ட உறுதியுடையவர்கள் மனத்தையும் தமது வஞ்சனைத் திறத்தால் இழுத்துத் தம் வசஞ் செய்பவர்கள்.

**முலைக்கு விலைப்பண மாயிரக்கலமொட்டியளப்பினும் ஆசையப் பொருளொக்க நடிப்பவர் :—**

தம்பால் வந்த ஆடவர்கள், தனத்துக்கு விலையாகத் தனத்தினை ஆயிரக்கலம் தந்தாலும், அப்பொருளுக்கு ஏற்ற அளவில் ஆசை வைத்து நடிப்பவர்கள்.

எண்ணித் தரமாட்டார்களாம். அளந்துதான் தருகின்ருர்களாம். அப்படிப் படியால் அளந்து தந்தாலும், தந்த பணத்துக்கு ஏற்ப அளந்து அவர்களுடன் பழகுவார்களாம்.

**உடன் மாலாய் :—**

இத்தகைய விலைமாதர்களுடன் சேர்ந்து மயக்கமடைந்து.

**மேலிளைப்பு முசிப்பு மவத்தையுமாய் :—**

இவ்வாறு பொதுமாதர் வசமானவர்கள், பின்னர் இளைப்பு நோயும், மெலிவும் பல வேதனைகளையும் அடைந்து துன்புறுவார்கள்.

**எடுத்த குலைப்புடன் பித்தமு மேல்கொள :—**

நடுக்குவாதம், பித்தகாசம் முதலிய நோய்களுக்கு ஆளாகித் துயரம் அடைவார்கள்.

**தலையிட்ட விதிப்படியதனுலே :—**

தலையில் பிரமன் எழுதிய விதிப்படி இவர்கள் அலைவார்கள்.

**அபத்தனெனப்பல பாடுபட்டு :—**

அபத்தன்—பொய்யன். பொய்யன் என்று உலகத்தார்கள் இகழும்படி அநேக துன்பங்களையுற்று வருந்துவார்கள்.

**புழுக்கொள் மலக்குகை வீடுகட்டியிருக்கும் :—**

புழுக்கள் நிறைந்த மலக் குகையாகிய இந்த உடம்பாகிய வீட்டை விடாமல் கட்டிக்கொண்டிருப்பது கீழோர்களின் தன்மை.

எனக்கு நினருள் தாராய் :—

"இப்படிப்பட்ட தீயவனுகிய அடியேனுக்கு முருகா! உன் திருவருள் தந்து காத்தருள்" என்று ஆசிரியர் முறையிடுகின்ருர்.

ஏலம்வைத்த புயத்தி லணைத்தருள் வேலெடுத்த சமர்த்தை யுரைப்பவர் ஏவருக்கு மனத்தில் நினைப்பவை அருள்வோனே :—

இந்த ஏழாவது அடி மிகவும் இனிமையானது. இதனை மனனஞ் செய்துகொண்டு ஓதுதல் வேண்டும்.

முருகன் திருவுருவப் படங்களில் வேலைக் கையில் ஏந்துவதாகத் தீட்டுவது கூடாது. வேல் அவருடைய திருமார்பில் சாய்ந்த வண்ணம் இருக்க வேண்டும். இதனை, "புயத்திலணைத்தருள் வேல்" என்று வருவதனுல் அறிக.

முருகன் வேல்விட்ட பெருமையைச் சதா துதி செய்வோர்களின் மன விருப்பங்கள் அனைத்தையும் பெருமான் பூர்த்தி செய்தருள் புரிவான்.

"அடியவரிச்சையில் எவையெவையுற்றன
அவை தருவித்தருள் பெருமாளே"
—(கலகலென) திருப்புகழ்.

"வேலு மயிலும் நினைந்தவர் தந்துயர்
தீர அருள்தரு கந்த நிரந்தர
மேலை வயலி யுகந்து நின்றருள் பெருமாளே"
—(வாளின்) திருப்புகழ்.

"நினைத்தவை முடித்தருள் க்ருபைக் கடல்"
—திருக்கையில் வழக்க வகுப்பு.

"முருகொத்தியே முன்னியது முடித்தலின்" —புறநானூறு.

ஏழிசைத் தமிழிற் பயனுற்ற வெணுவலுற் றடியிற்பயில் உத்தம ஈசன் முக்கணிருத்தன் :—

திருவானைக்கா என்ற திருத்தலத்தில் சிவபெருமான் வெண்ணுவல் மரத்தின் கீழ் எழுந்தருளியிருக்கின்ருர். நமது தேயம் நாவலந் தீவு நாவலந்தீவில் நாவலின்கீழ் இருக்கின்ருர் என்பது மிகவும் சிறந்தது.

"வெண் நாவலின் மேவிய எம் அழகா" —சம்பந்தர்.

"தீவினை சேராதே
இருளறுத்துநின் றீசனென்பார்க் கெலாம்
அருள் கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே" —அப்பர்

# கற்பு

## மன்னம்மாள்

"தன் வினை தன்னைச் சுடும்"

மன்னம்மாவுக்கு ஒரு ஆண், ஒரு பெண். ஆக இரண்டேகுழந்தைகள். சுருக்கமான குடும்பம். நெருக்கம் இல்லை. மன்னம்மாவின் மனதில் உருக்கமும் கிடையாது. அவள் மனம் கருங்கல் போன்றது. கணவன் முதல் அனைவரும் அவளுடைய ஆணைக்கு அடங்கவேண்டும். ராணுவ ஆட்சிதான். கணவன் பழநியப்பன் ஒரு அப்பாவி. யந்திரம் மாதிரி ஓய்வு ஒழிச்சல் இன்றி வேலை பார்ப்பான். சோம்பல் என்பதை இன்னது என்று அறியாதவன்.

அதிகாலையில் தூக்கத்தைவிட்டு எழுவான். படுக்கைகளை உதறிச் சுத்தமாக மடித்து உயரத்தில் எடுத்து வைப்பான். இரண்டு கல் நடந்து சென்று வையாபுரி ஏரியில் ஆடைகளைத் தோய்த்து, திருநீறு தரித்து பழநிமலையை வலம் வந்து, பாதவிநாயகரைப் பணிந்து வீட்டுக்கு வருவான்.

மன்னம்மா அப்போதுதான் எழுந்து சோம்பலாய் உடம்பை முறித்து, சனியன் பிடித்த சூரியன் இதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டானே'' என்று கூறி, கிணற்றடியில் சென்று, சாம்பலையிட்டு

---

"...ஆனைக்காவுடை ஆதியை நாளும்
இறைவ னென்றடி சேர்வார் எம்மையும் ஆளுடையாரே''
—சுந்தரர்.

இவ்வாறு மூவரும் இசைத் தமிழால் பாட, அத்தமிழ் மணக்குந் திருத்தலம் திருவானைக்கா.

ஆனைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப் பொருளை''
—பெரியபுராணம் (சம்பந்தர் 345)

பாலுக்குப்பாலன் அழப் பாற்கடல் வழங்கும் தயாபரன். ஆதலின் "உத்தமன்'' என்றார்.

### கருத்துரை

திருவானைக்காவுறைதேவனே! மாதர் மயக்குற்ற அடியேனை ஆண்டருள்.

நிதானமாகப் பல்லை விளக்குவாள். மகனையும் மகளையும் எழுப்பி வீட்டைக் கூட்டுவாள். பறட்டைத் தலையைக் கோதி முடிப்பாள்.

அவளுடைய புதல்வன் வையாபுரி அவசரம் அவசரமாக கிணற்றி லிருக்கின்ற தண்ணீரை இரண்டு வாளியில் முகந்து குளித்து விட்டு வருவான். தகப்பனுருக்குப் பயந்து சிறிது திருநீற்றை நெற்றியில் இட்டுக் கொண்டு இரண்டு கிண்ணிகளைக் கழுவி வைப்பான்.

மன்னம்மா இரு கிண்ணிகளிலும் பழஞ் சோற்றை இட்டு உப்பிட்டு ஊறுகாயை வைப்பாள். தந்தையும் மைந்தனும் சாப் பிட்டு எழுந்து, கையலம்பிக் கொண்டு கடைக்குப் புறப்படுவார்கள். பழநியப்பனுக்கு அடிவாரத்தில் ஒரு சிறிய படக்கடையுண்டு.

''மன்னு! நான் கடைக்குப் போகின்றேன். வீட்டைப்பார்த்துக் கொள். நான் வரட்டுமா?'' என்பான் பழநியப்பன்.

அவள் ''அந்தமானுக்கா போறீர். இங்குள்ள கடைக்குத்தானே. போறீர். போம். இந்தக் குடும்பத்தில் எப்போதுமே ஒரு நிம்மதி கிடையாது, பெரிய கவர்னர் வேலை பார்க்கின்ற மாதிரி. நீர் சட்டைபோட்டுக் கொண்டு, துண்டையும் மேலே தொங்கவிட்டுக் கொண்டு போகிறீர். பெற்ற இந்தப் பெண் ஒரு வேலையும் செய்ய மாட்டேன்னு பொழுது விடிந்ததும் மஞ்சரி, குமுதம் என்று ஏதா வது ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருக்கிறது. எனக்குத்தான் எத்தனை வேலைகள். வீடு கூட்டவேணும், பாத்திரங்களை அலம்ப வேணும்; கடைக்குப் போகவேணும்; காய்கறி வாங்கி வரவேணும்; அடுப்பு பற்ற வைக்கவேணும். ஈரக்கட்டை எரிகின்றதா? ஊது குழல் வைத்து ஊதவேணும்; புளி கரைக்க வேணும்; மிளகாய் அரைக்க வேணும்; காய்கறி நறுக்கவேணும்; அரிசி களையவேணும் அப்பப்பா! சமைக்கவேணும். வரிசைவரிசையாக வருகின்ற பிச்சைக் காரர்களை ஓட்ட வேணும். சாப்பிட நேரம் உண்டா? தூங்க நேரம் உண்டா? அக்கம் பக்கம் உள்ள வீடுகளில் பாத்திரம் தேய்க்க ஆள்; சமைக்க ஆள்; கூட்டிப் பெருக்க ஆள். இந்தச் சனியன் பிடித்த வீட்டில் எல்லாம் நானே செய்து தொலைக்கவேணும். மறந்து விட்டேன். கடைக்குப் போய் வரும் போது வெற்றிலை, பாக்கு, புகையிலை வாங்கி வாரும்...மாடுமாதிரி நான் உழைக்கின்றேன். மழை பெய்ந்தால் கவலைமாட்டுக்காவது சிறிது ஓய்வு உண்டு. எனக்கு அதுவும் இல்லை. ஏன் நிற்கிறீர்? காலத்தில் கடைக்குப் போம்''.

என்று வாய் ஓழியாமல் அடுக்கி தனியாவர்த்தனம் மத்தளம் வாசிப்பதுபோல் பேசினுள். இவற்றைக் கேட்ட பழநியப்பன் புன்சிரிப்பாக ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு மகனுடன் புறப்பட்டுச் சென்றுள்.

கடையைத் திறந்து, தண்டாயுதபாணி படத்துக்கு மலர் சூட்டிக் கற்பூர ஆராதனை செய்தான். முருகா! உலகமெல்லாம் கலகமின்றி வாழ அருள்செய். என் மனைவிக்கு நல்ல புத்தி கொடு... எனக்கு உன்னை யன்றி வேறு துணையில்லை'' என்று கும்பிட்டான். யாத்ரிகர்களிடம் நியாயமான விலை கூறிப் படங்களை விற்பான்.

அவனுடைய மகன் வையாபுரி, ''அப்பா இது என்ன சிறிய வியாபாரம். எங்காவது கடன் வாங்கி பெரிய அளவில் இங்கிலீஷ் மருந்து ஷாப் வைக்கலாமே. நிரம்ப லாபம் வரும். வண்டியும் வாகனமும் வாங்கலாம். அம்மாவுக்கும் தங்கைக்கும் நிரம்ப நகை செய்து போடலாமே?'' என்றான்.

''மகனே நீ சிறுபிள்ளை. உனக்கு வயது 25. அறியாமல் பேசுகின்றாய். மனிதனுக்குப் பணம் முக்கியமன்று. போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து.

நாம் பழநியாண்டவன் அடியில் இருக்கின்றோம். கொஞ்சம் லாபம் வந்தாலும் இது நல்ல தொழில். மருந்துக் கடை வைத்தால் மருந்து விற்கின்ற வியாபாரிக்கு என்ன எண்ணம் வரும் தெரியுமா? மருந்துகள் நிரம்ப விற்க வேண்டும் என்றுதான் எண்ணுவான். பேதி மருந்து நிரம்ப விற்க வேண்டும் என்று எண்ணுவானானால் அது நல்ல எண்ணமா? எண்ணிப்பார். ஊரில் நல்லா இருக்கின்றவனுக்கெல்லாம் பேதியானால்தானே மருந்து நிரம்பவிற்கும். ஜுர மாத்திரை அதிகம் விற்கவேண்டும் என்றால், சும்மா இருப்பவனுக்கெல்லாம் காய்ச்சல் வரவேண்டும். இந்த எண்ணம் நன்மை தருமா? மயானத்துக்கு அருகில் எரு முட்டை தட்டி விற்கின்றவள் என்ன் எண்ணுவாள்? நினைத்துப்பார்.

எரு முட்டைகள் யாவும் சீக்கிரம் விற்க வேண்டும் என்று எண்ணுவாள். எருமுட்டைகள் எப்பொழுது விற்கும்? அதிகம் பேர் இறந்தால் தானே விற்கும். பலபேர் சாகவேண்டும் என்றுதானே எரு முட்டை வியாபாரி எண்ணுவாள். பல பேருக்கு வியாதி வந்தால் தான் மருத்துவனுக்குப் பிழைப்பு. பலர் சண்டை பிடித்தால் தான் வழக்கறிஞருக்குப் பிழைப்பு. ஆதலால் அந்தத் தொழில்களால் பாவம் உண்டு.

நம்ம தொழில் புனிதமானது. நம்மிடம் படம் வாங்குகின்றவர்கள், அன்றாடம் ஆண்டவனைப் பூசித்து இகபர சுகம் பெறுகின்றார்கள். பாயசம் உண்டவனும் பசியாறுகின்றான். பழைய சோறு உண்டவனும் பசியாறுகின்றான். இந்தப் பாழும் வயிறு நன்றி கெட்டது. பிறந்த நாள் தொடங்கி இதற்கு உணவு தருகின்றோம். ஒருநாளைக்குத் தரவில்லையானால் இந்த நன்றி கெட்ட வயிறு நம்மை

என்னபாடுபடுத்துகின்றது. வயிறு வளர்ப்பதற்காகப் பாவமான தொழில் செய்யக் கூடாது. பாவத் தொழில் செய்து வந்த பணத்தில் நகைகள் செய்து அணிந்து கொண்டால் அது நகையன்று; பகை. அந்த நகை நம்மைக் கண்டு நகைக்கின்றது. நகையை மிகை என்று கருதி அரைவயிற்றுக் கஞ்சியேயானாலும் அவன் நாமத்தைச் சொல்லி நிறைவுடன் சாப்பிட வேணும். இதுதான் வாழ்வு'' என்றான்.

தந்தையின் வார்த்தைகளைக் கேட்ட மைந்தன் தந்தை கூறுவதில் நியாயம் உளது என்று எண்ணினான். ஆனாலும் அவன் மனதில் நீர்க்குள் பாசி போல் அந்த அறவுரை வேர்க் கொள்ளவில்லை.

பங்குனி உத்தர விழா வந்தது. பழநியில் பங்குனி விழா மிகவும் முக்கியமானது. திரள்திரளாக பக்த கோடிகள் பழநியில் கூடினார்கள். காவடியெடுத்து ஆடினார்கள். பழநியாண்டவன் நாமத்தைச் சொல்லி பக்தி பரவசமாகப் பாடினார்கள். ''ஹரோ ஹரா! பழநியாண்டவனுக்கு ஹரோ ஹரா'' ''ஹரஹர ஹரோ ஹரா'' என்று அடியார்கள் ஒலிக்கின்ற ஒலி விண்ணைப் பிளந்தது. கேட்பவர் மனத்தை உருக்கியது. அடியார்களது அன்பு காண்போரது உடம்பைச் சிலிர்க்க வைத்தது.

பசுவின் மடியில் உணியிருக்கும். அது பாலைக்குடிக்காது. பாலின் அருமையை அது அறியாது. உதிரத்தையே குடிக்கும். அதுபோல் மன்னம்மாள் பழநியாண்டவனுடைய அருளாகிய பாலைப்பருகாமல் பாவமாகிய உதிரத்தையே உறிஞ்சுகின்றவளாக இருந்தாள்.

பங்குனி உத்தர நன்னாளன்றுதான் எம்பிராட்டி இமயவல்லியை சிவபெருமான் திருமணஞ் செய்து கொண்டார். சீதாபிராட்டியை இராமர் திருமணஞ் செய்து கொண்டதும் பங்குனி உத்தரத்தன்றுதான். பங்குனி உத்தரத்தில்தான் புகழ்பெற்ற அர்ச்சுனன் அவதரித்தான்.

பழநியில் ஜனநெருக்கடி அதிகம். இரவு பகல் ஒழியாத அடியார் கூட்டம். தங்க இடம் ஏது? உண்ணநேரம் எது? பழநியப்பன் இரவு பகலாகக் கடையிலேயே யிருந்து, வருகின்ற அடியார்களிடம் ஆண்டவனுடைய படங்களை விற்று, வேலவனை நினைத்து சிலம் மிகுந்த சிந்தையுடன் இருந்தான்.

அன்றிரவு கூட்டத்தில் ஒரு பெண் தன் கணவனை விட்டுப் பிரிந்துவிட்டாள். எங்கு தேடியும் கிடைக்கவில்லை. அவள் நிரம்ப அணிகலன்கள் அணிந்து கொண்டிருந்தாள். அவள் உள்ளம் நடுங்கியது. ஊருக்குள் வந்து மன்னம்மாளின் வீட்டுத் திண்ணையில் சற்றுச் சாய்ந்தாள். தூக்க மயக்கம் கண்களைச் சொருக வைத்தது.

மன்னம்மாள் இதைப் பார்த்தாள். அவள் மனதில் தீய நினைவுகள் கோர தாண்டவம் தலைவிரித்து ஆடியது. தனக்கோ தன் மகளுக்கோ நகையில்லை. மகளைப் பார்க்க வருகின்றவர்கள் நகையில்லையே என்று முகத்தைச் சுளித்துக் கொள்ளுகின்றார்கள், அதனால் வயதுக்கு வந்த பெண்ணுக்குக் கல்யாணம் ஆகாமல் இருக்கின்றது. இந்தச் சந்தர்ப்பத்தை நாம் பயன் படுத்திக் கொண்டால் நல்லது'' என்று கொடிய சிந்தனை செய்தாள்.

''யாரம்மா நீ, என் சகோதரி போல் இருக்கின்றாயே?''

''அம்மா! கோயிலுக்கு வந்தோம். என் கணவர் என்னைக் கூட்ட நெரிசலில் விட்டுப் பிரிந்து விட்டார். தாயே! நான் என்ன செய்வதென்று தெரியாது அலைந்து நொந்து வெந்து இங்கு அமர்ந்துளேன்''

மன்னம்மா ''அம்மணி! இத்தனை நகைகள் போட்டுக் கொண்டிருக்கின்ற நீ திண்ணையில் இருப்பது நல்லதல்ல. காலம் கெட்டுப் போய்க் கிடக்குது. பாவிகள் நிறைந்த உலகம்...நீ என் குழந்தை மாதிரி உள்ளே வா இந்த அறையில் பாய் போட்டுப் படு. பொழுது விடிந்ததும். உன் கணவனை தேடிக் கண்டு பிடிக்கலாம் என்றாள்.

''நல்லது'' என்று அப்பெண் ஆட்டுக்குட்டி கசாப்புக் கடையில் நுழைவது போல் உள்ளே சென்று, அவள் காட்டிய தனியறையில் பாயில் படுத்தாள். உடம்பில் இருந்த அசதி! இடத்தின் வசதி. இரண்டும் சேர்ந்து கண்ணயர்ந்து விட்டாள்.

மன்னம்மா என்ன என்னவோ தீய ஆலோசனை செய்து கொண்டிருந்தாள். அவள் மகன் மெல்ல வீட்டுக்குவந்தான். மகன் வந்ததை மன்னம்மா அறியமாட்டாள். அவன் வந்து அறையில் ஒரு அதிரூப சுந்தரி படுத்திருப்பதைக் கண்டான். காமத்தால் கண் கெட்டான். மெல்லப் போய் அவள் அருகில் படுத்தான்.

அவள் திடுக்கிட்டு எழுந்தாள். தன் அருகில் ஒரு கட்டிளங் காளை இருப்பதைக் கண்டாள். அதிர்ச்சியடைந்தாள். மெல்ல ''இப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. எனக்கு நல்ல அதிர்ஷ்டந் தான். பெரியம்மாவுக்குத் தெரியக்கூடாது. ஒண்ணுக்குப் போய் விட்டு வருகின்றேன்'' என்று கூறிவிட்டு, அடிமேல் அடி வைத்து தோட்டத்துக் கதவைத் திறந்து கொண்டு ஒரே ஓட்டம் பிடித்தாள். ஓடி பாதவினாயகர் கோயிலை அடைந்து ஒருபுறம் நின்றாள். அவளுடைய கைகால்கள் நடுங்கின. ''அப்பனே! விக்கின விநாயகமூர்த்தி! என்னைக் காப்பாற்று, வள்ளியை முருகனுக்குக்

முருகா

# அருணகிரிநாதரும் நம்பியாண்டார் நம்பியும்

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

(24-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இப்படியே திருக்கலம்பகத்தில், ஒரு பாட்டில் இந்தக் கருத்தை இணைக்கிறார். அதுவும் அகத்துறைப் பாட்டே. நொதுமலர் வரைவு கூறித் தோழி வரைவு கடாதல் என்னும் துறையில் அமைந்தது இது. 'தலைவியை அயலார் மணம் செய்ய முயல்கிறார்கள். அதற்கு முன்னே நீ திருமணம் செய்து கொள்ள வேண்டும்' என்ற கருத்தை உடையது அந்தச் செய்யுள். சம்பந்தப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாக வைத்து, அவனுக்குரிய மலையில் வாழும் தலைவனாகக் காதல் செய்யும் ஆடவனைக் காட்டுகிறார் நம்பிகள். அங்கே ஞானசம்பந்தரை மூன்று திருநாமங்களால் குறிக்கிறார். 'புகலியர் அதிபன்', 'நதிதரு வரதன்', 'அணிதமிழ் விரகன்' என்பன அவை. சீகாழிப்பதியில் அவதாரம் செய்தமையால் புகலியர் அதிபன் என்றார். இனிய தமிழ் மாலைகள் பாடியமையால் அணிதமிழ் விரகன் என்றார்.

---

கல்யாணம் செய்து வைத்த கருணைக் கடலே! என் இடர் களைந்து காப்பாற்று'' என்று கண்ணீர் வடித்துத் துதி செய்தாள். அவள் கணவன் அங்கும் இங்குந் தேடி முடிவில் அவ்விடம் வந்து கண்டு அவளுடன் சென்றான்.

வையாபுரி ஆசைக்கனவுகண்டு அவள் வருவாள் என்று எண்ணிப் படுத்திருந்தான். சிறிது கண்களை மூடிவிட்டான்.

மன்னம்மாள் ஒருகூரிய வாளையேந்தி உள்ளே சென்று ஒரே வெட்டாக வெட்டினாள். ''ஐயோ'' என்று அலறி அவன் மாண்டான். விளக்கைத் தூண்டிப் பார்த்தாள் மன்னம்மாள்.

மகனைக் கண்டாள். அணிகலன்கள் அணிந்த மங்கையைக் கண்டாள் இல்லை. அவள் எப்படிச் சென்றாள்? இவன் எப்போது எப்படி இங்கே வந்தான். நான் ஒன்று நினைக்க விதி ஒன்றை நினைந்து விட்டதே'' என்று கதிகலங்கி நின்றாள்.

தன் வினை தன்னைச்சுட்டது.

மற்றொரு தொடர் நதிதரு வரதன் என்பது. அதற்கு நதியைத் தந்த அருளாளன் என்றும் நதியால் தரப்பெற்ற வரதன் என்றும் இரண்டு வகையில் பொருள் கொள்ளலாம். ஞான சம்பந்தர் வரலாற்றில் இந்த இரண்டு பொருளோடு தொடர்புடைய செய்தி யாதும் இல்லை. ஆனால் அவர் முருகனுடைய திருவவதாரம் என்பதை எண்ணினால், இத்தொடருக்கு நதியால் தரப்பெற்ற வரதன் என்று பொருள் கொள்ளலாம். முருகனைக் கங்கையின் மகன் என்று கூறுவர். ''நதிபுத்திர ஞான சுகாதிப'' என்பது அருணகிரியார் வாக்கு. கங்கை நதியால் தரப்பெற்ற வரதன் என்று இத்தொடருக்குப் பொருள் கொள்ள வேண்டும். அது முருகனைச் சுட்டுவதாக இருந்தாலும், அவனே சம்பந்தராகத் தோற்றினமையால் அது பொருந்துவதாயிற்று.

ஆகவே மலைமகள் புதல்வன், மயிலேந்திய வள்ளல், நதிதரு வரதன் என்ற தொடர்கள் முருகனைக் குறித்து நின்று, அப் பெருமானுடைய திருவவதாரமாகிய ஞானசம்பந்தருக்கும் உரியனவாக அமைந்தன. இவற்றால் நம்பியாண்டார் நம்பிகள் ஆளுடைய பிள்ளையார் முருகனுடைய திருவவதாரம் என்ற கொள்கையை உடையவர் என்று புலனாகிறது. இதே கொள்கையை உடைய அருணகிரிநாதப் பெருமான் பல இடங்களில் முருகனை ஞானசம்பந்தராகவே பாடுகிறார்

''அழுதுலகை வாழ்வித்த கவுணிய குலாதித்த
அரியகதிர் காமத்தில் உரியாபி ராமனே'!

—என்பதுபோலப் பல இடங்கள் வருவதைக் காண்க.

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

(மலர் 32—285-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### நரியின் கதை

தருமர் "நல்லவர்கள் தீயோரைப் போலவும், தீயோர் நல்லவரைப் போலவும் காணப்படுகின்ருர்கள். அப்படியுள்ளவர்களை நாங்கள் எவ்விதம் அறிந்து கொள்வது ?" என்று கேட்டார்.

பீஷ்மர் "கௌந்தேய! பார்வையில் தீயவர் தூயராகவும், தூயவர் தீயராகவும் காணப்படுவார்கள். இதனை நன்கு ஆராய்ந்துதான் முடிவு செய்யவேண்டும். இது பற்றி முன் நடந்த ஒரு நரியின் வரலாற்றைக் கூறுகின்றேன்.

முன்ஞெரு காலத்தில் செல்வம் நிறைந்த புரிகை என்ற பட்டினத்தில் பௌரிகன் என்ற மன்னன் இருந்தான். அவன் பிறருக்குத் துன்பமே புரிந்து தீயனுய் வாழ்ந்தான். அவன் ஆயுள் முடிந்தபின் நரியாகப் பிறந்தான். முன் செய்த சில நல்வினைப்பயனுல் முற்பிறப்பையுணர நேர்ந்தது. அந் நரி முற்பிறப்பை நினைத்துத் துயரமடைந்தது. அதன் மனம் நல்வழியிற் சென்றது. எந்த உயிர்களுக்குந் தீங்கு செய்யாமலும் புலால் உண்ணுமலும், உண்மையையுரைத்துக் கொண்டும் மயானத்தில் வசித்தது. உதிர்ந்த கனிகளைத் தின்று கொண்டும், சில சமயத்தில் இலைகளை மட்டுந் தின்று கொண்டும், சில சமயத்தில் தண்ணீரை மட்டும் பருகிக்கொண்டும் உறுதியான நியமத்துடன் இருந்தது. வேறு பிராணிகளுடன் சேராமல் ஒழுகியது.

மற்ற நரிகளுக்கு இதன் போக்கு பிடிக்கவில்லை. அதன் குணத்தை மாற்ற முயன்றன. "உனக்கு ஏன் மாறுபட்ட புத்தி? நம் குலம் புலால் உண்ணக்கூடியது. நீ மட்டும் கனிகளையும், இலைகளையும் உண்பது சரியன்று. எங்களைப் போல் உடம்புக்கு உறுதிதரக்கூடிய புலாலை யுண்பாயாக. இலைகளிலும் பழங்களிலும் நல்ல சத்து ஏது? உனக்கு நாங்கள் கொணர்ந்து நல்ல சத்தான மாமிசத்தைத் தருவோம். இன்பமாக உண்யாய். இந்தத் தவ வாழ்க்கையை விட்டொழி" என்று கூறின.

நரி இணக்கமாகவும், வணக்கமாகவும் கூறத்தொடங்கியது. "அன்பர்களே! பிறப்பு முக்கியமன்று. ஒழுக்கந்தான் முக்கியம். புகழ்

விளையக் கூடிய புண்ணியச் செயலை நான் விரும்புகின்றேன். எந்த இடத்தில் இருந்தால் என்ன? மயானத்தில் இருப்பதனுல் குற்றமில்லை. இடம் முக்கியமாகாது; செயல்தான் முக்கியம்'' ஒருவன் மடாலயத்தி லிருந்து கொண்டு பழி பாவமான காரியங்களைச் செய்கின்றுன் மற் ருெருவன் பாழிடத்திலிருந்து கொண்டு தவஞ் செய்கின்றுன். இதில் எது மேலானது என்று எண்ணிப்பாருங்கள். உயிர்க் கொலையும் புலைப்புசிப்பும் பாவத்தைத்தருவன. நான் அவற்றை ஒரு போதும் செய்யேன். கொடுமையைக் கனவிலுங் கருதேன்.

அகிம்சைதான் பெரிய அறம். நீங்கள் உணவின் பொருட்டு ஆசை யால் எதையும் செய்கின்றீர்கள். தீமையின் பயனைச் சிந்திக்கின்றீர் களில்லை. நான் என் தருமத்திலிருந்து விலகமாட்டேன்'' என்றது.

சிறந்த ஆற்றல் படைத்த ஒரு புலி அந்த நரியின் நற்குணங்களைக் கவனித்தது. தூய்மையும் வாய்மையும் உடைய அறிஞன் என்று கரு தியது. அதைத் தனக்கு அமைச்சனுக்கிக் கொள்ள விரும்பியது. நரி யிடம் வந்து ''நண்பனே! உன்னுடைய நல்லொழுக்கத்தைக் கண்டு நான் மகிழ்கின்றேன். எனக்கு நீ மந்திரியாக இரு. உன் விருப்பத் துக்கு நான் தடை செய்யமாட்டேன். எங்கள் புலிக்குலம் கொடியது. நீ என்னுடன் இருந்து அரச காரியத்தைச் செய்து கொண்டிரு. உனக்கு வேண்டாதவைகளை விலக்கிவிடு. மறுக்காமல் எனக்கு மந் திரியாக இருப்பாயாக'' என்றது.

நரி வணக்கமாக உரைக்கத் தொடங்கியது. ''வீரனே! அறம் பொருள்களில் வல்லவனுன நேர்மையான ஒருவனை நீ துணையாக்கிக் கொள்வது நியாயமே. அமாத்தியனில்லாத அரசனும், நேர்மையற்ற அமாத்தியனையுடைய அரசனும் இனிது ஆட்சி செய்யமுடியாது. நான் இப்போது அமைதியாக வாழ்கின்றேன். அரசசேவகத்தில் அமைதி யிருக்காது. சுகத்தில் எனக்கு விருப்பமில்லை. உன்னுடைய பழைய வேலைக்காரர்கள் என் மீதுள்ள அன்பை மாற்ற முயலுவார்கள். நீ சிறந்த ஆற்றலும் அளவற்ற அன்பும் ஆலோசனையும் முயற்சியும் கூடி விளங்குகின்றுய். எனக்கு நீரும் கனியுந்தான் உணவு. அவை வனத் தில் எளிதாகக் கிடைக்கின்றன. பதவியில் எனக்கு ஆசையில்லை. அரச ஞல் தண்டனையடைந்தவர்கள் பலர். அவசியம் நான் உனக்கு அமைச் சனுக இருக்க வேண்டுமாயின் ஒரு உடன்பாட்டைச் செய்து கொள்ளவேண்டும். என்னைச் சேர்ந்தவர்களிடம் நீ மரியாதை காட்ட வேண்டும், இன்சொல் கூறவேண்டும். ஒரு போதும் மற்ற மந்திரிகளு டன் ஆலோசனை செய்யக்கூடாது. மனமாற்றத்தால் என் மீது வீண் பழி சுமத்தக்கூடும். நீ அதற்குச் செவி கொடுக்கக்கூடாது. தனிமை யில் என்னுடன் ஆலோசனை செய். என் இனத்தாரைத் தண்டிக்கப் படாது'' என்று கூறியது. புலி அப்படியே ஆகட்டும் என்றது. அது

முதல் நரி அப்புலியிடம் மந்திரி பதவியில் இருந்தது. புலியுடன் தனிமையில் இனிமையாகப் பேசும். புலிக்கு நரியிடம் அளவற்ற அன்பு வளர்ந்து வந்தது. அதை நன்கு மதித்தது.

புலியின் மற்றபரிவாரங்கட்குப் பொறாமைக் கனல் பொங்கியது. பிறருடைய பொருளை முன் போல் கவரமுடியாமல் நரியால் அடக்கப்பட்டன. நரிக்கு தீய வழிகளைக் கற்பிக்க முயன்றன. ஆனால் நரி தன் தரும நெறியிலிருந்து மாறவில்லை. இதனால் மேலும் பொறாமை கொண்ட மற்ற விலங்குகள் நரியைக் கெடுப்பதற்கு என்ன வழி? என்று சிந்தித்து முடிவு செய்தன. விலங்கரசான புலிக்கு என்று பக்குவஞ் செய்து அதன் குகையில் வைத்திருந்த இறைச்சியைக் கொண்டு போய் இரகசியமாக நரியிருக்கும் குகையில் வைத்துவிட்டன. நரியும் இதனைக் கண்டு கொண்டது. இதன் மூலம் நமக்கு இப்பதவி விலகட்டும் என்று எண்ணியது. முன் அவசரப்பட்டு பிறர் கூறும் வீண் பழிக்குக்காது கொடுக்கக்கூடாது என்றேமே? புலியின் தன்மையை இதன் மூலம் அறிந்து கொள்ளவும் இது சந்தர்ப்பம் என்று எண்ணி சும்மா இருந்தது.

பசியுடன் புலி குகைக்கு வந்தது. அங்கிருந்த உணவு காணப்படவில்லை. "இதைக்களவு செய்த திருடனைத் தேடிக்கண்டு பிடியுங்கள்" என்று கட்டளையிட்டது. வஞ்சனையுள்ள மற்ற நரிகள் தேடியது போல் நடித்து புலியிடம் வந்து "விலங்கின் வேந்தே! தன்னைப் பெரிய அறிவாளியென்றும் நல்லொழுக்கமுள்ளவன் என்று எண்ணியுள்ள உமது மந்திரியால் இறைச்சி கவரப்பட்டது. அதன் குகையில் தான் இருக்கின்றது" என்று கூறின.

புலி இதைக் கேட்டுப் பொங்கி எழுந்தது. நரியைக் கொல்ல வேண்டும் என்று கருதியது. இந்த நேரம் பார்த்து மற்ற மந்திரிகள் "அரசே! அந்த மந்திரியாகிய நரி வஞ்சகமுள்ளது. தங்களுக்கு உரிய இறைச்சியையே கவருமானால் அது வேறு எதைத்தான் செய்யாது. தான் புலால் உண்ணாத புனித மனிதனைப் போல் நடிக்கின்றது. நீர் பித்தளையைத் தங்கம் என்று எண்ணுகின்றீர். சொல் வேறு செயல் வேறுடைய அந்த நரியின் குணம் மட்டமானது. எங்களுக்கும் எப்போதும் கெடுதிகளையே செய்கின்றது. நாங்கள் தங்கள் மீதுள்ள அச்சத்தினல் தங்களிடம் சொல்லாமல் வருந்திக் கொண்டிருந்தோம். பொய் நடிப்புள்ள நரியின் இடத்தில் இறைச்சியிருக்கின்றது; பாரும்" என்று கூறி அதனைக் கொணர்ந்து காட்டின.

புலி தன் ஜாதியின் குணத்தால் சீற்றங் கொண்டது. அதன் கண்கள் சிவந்தன. காதுகளிலும் மூக்கிலும் புகையெழுந்தது. "அந்த நடிப்புக்கார நரியைக் கொல்லுங்கள்" என்று கட்டளையிட்டது.

புலியின் தாய் நரியின் நற்குணத்தை நன்கு உணர்ந்தது. அறிவுள்ள அத் தாய்ப்புலி ''மகனே! அவசரப்படாதே...ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு. வஞ்சகமுடைய நெஞ்சகத்தால் கோள்வார்த்தைகளைக் கேளாதே.பலகாலம் ஆய்ந்து அறிந்த ஒருவன் மீது திடீர் என்று ஐயுறுவது அறிவுடைமையாகாது. உலோபிகள் தருமகுண சிலனிடத்தும், மூடர்கள் பண்டிதர்களிடத்தும், பலவீனர்கள் பலவானிடத்தும், வறியவர் பணக்காரனிடத்தும் குரூபி அழகனிடத்தும் பொறாமையும் பகையுங் கொள்வார்கள். இது உலக இயல்பு. அறிவுள்ள நரி நாம் எதைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளுவதில்லை. இந்தச் செயல் சூதானது. பொய் மெய்யாகவும், மெய் பொய்யாகவும் காட்சி தரும். ஆய்ந்து ஓய்ந்து ஆராய்தல் வேண்டும். கண்ணால் கண்டதும் பொய்; காதால் கேட்டதும் பொய். தீர விசாரிக்க வேண்டும் என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள். ஆகாயம் கவிழ்ந்த கரி மிடாவைப் போல் காட்சி தருகின்றது. உண்மையில் விண்ணில் கருமை கிடையாது. மின்மினிப்பூச்சி நெருப்பைப் போல் காட்சி தருகின்றது. உண்மையில் மின்மினியில் நெருப்பில்லை. இவை வெறுங் காட்சி மாத்திரமேயாகும்; அவசர முடிவு ஆயிரம் கவலையைத் தரும்; நீ நினைத்தால் நரியை ஒரு நொடியில் கொன்று போடலாம். அது பெரியகாரியமன்று. மகனே! பொறுமை பெருமை தரும். நரி மிக்க தூய்மையானது. பல காலம் கண்டறிந்த உண்மை. நல்ல பாத்திரம் கிடைப்பது அரிது. இந்த மற்ற விலங்குகள் வஞ்சகமாகப் பொய்க் குற்றம் சாட்டி நரியைக் கொல்ல முயல்கின்றன. இதுதான் உண்மை'' என்று தாய்ப் புலி கூறியது.

புலி சாந்தமடைந்தது. தாயின் அறவுரையைத் தலைமேற் கொண்டது. உண்மையை யுணர்ந்தது. மற்ற மந்திரிகளை வெறுத்தது. தன் முதல் அமைச்சனான நரியை அழைத்துக் கட்டியணைத்துக் கொண்டது. உயிர் விடத் துணிந்த நரியைப் பார்த்து, நீர் பெருகிய கண்களுடன் ''என் அன்புள்ளவனே! நீ என்னை மன்னிக்க வேண்டும். என் அவசரப் புத்தியை நினைந்து வருந்துகின்றேன்'' என்றது.

நரி ''புலியரசனே! நான் முதலில் மதிக்கப்பட்டேன். இப்போது அவமதிக்கப்பட்டேன். உன் இயல்பு ஆத்திரமும் அவசரமும் உடையது. நாம் முதலில் செய்து கொண்ட ஒப்பந்தத்திலிருந்து நீ நழுவி விட்டாய். இனி நான் உன்னிடம் வாழும் தகுதியுள்ளவனல்லன். மகிழ்ச்சியில்லாதவர்கள், அதிகாரத்திலிருந்து நழுவினவர்கள், மானக் குறைவை அடைவிக்கப்பட்டவர்கள், பிறரால் வஞ்சிக்கப்பட்டவர்கள், உலோபிகள், கோபிகள், அச்சம் உள்ளவர்கள், இகழ்ச்சியாகப் பேசப்பட்டவர்கள், பொருளைக் கவர்ந்தவர்கள், கர்வம் பிடித்தவர்கள், விலகிய பின் சேர்த்துக் கொள்ளப்பட்டவர்கள், தலை

வனுக்குப் பல துன்பங்களை எதிர்பார்ப்பவர்கள், வஞ்சகமுள்ளவர்கள், லஞ்சம் வாங்குபவர்கள் என்ற இவர்கள் தலைவனுக்கு தீங்கு புரிகின்றவர்களாவார்கள். என்னை நீ மீண்டும் அதிகாரத்தில் வைத்தாலும் என்னிடம் நம்பிக்கை யுண்டாகாது. எனக்கு உன்னிடத்தில் நம்பிக்கை ஏற்படாது. சோதனை செய்து பதவியில் வைத்து, சொன்ன ஒப்பந்தத்தைக் கைவிட்ட உன்னால் நான் அவமதிக்கப்பட்டேன். நல்லவன் என்று சபையில் கூறிவிட்டு குற்றவாளி யென்று கூறுவது பொருத்தமற்றது. உனக்கு சந்தேகம் வரும். எனக்குப் பயம் வரும். உனக்கும் எனக்கும் இடையில் கோள் சொல்பவர்கள் பலர் இருக்கின்றார்கள். பிரிவுப்பட்ட உள்ளத்தில் ஒற்றுமை யேற்படுவது கடினம்.'' என்று தழுதழுத்த குரலுடன் கண்கலங்கக் கூறியது.

புலிக்கு நல்லுரை கூறியபின் நரி வாழ்க்கையை வெறுத்து வனத்திற் சென்று பிராயோபவேசஞ் செய்து உடம்பை விட்டு நற்கதி பெற்றது.

ஆதலால் புறத்தோற்றத்தை மட்டும்பார்த்து ஒருமனிதனை மதிப்பிடக்கூடாது. சோதனை செய்து பார்த்தபின் ஒருவன் நல்லவனா? அல்லவனா? என்று முடிவு செய்யவேண்டும். பிறர் கூறும் கோள்களைக் கேட்கக்கூடாது, தன்னறிவால் சிந்தித்துச் செய்யவேண்டும்.'' என்றார்.

(தொடரும்)

---

* பிராயோபவேசம்—பட்டினி கிடந்து இருந்தபடியே உயிர் விடுவது.

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதில் விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

---



---

போன் : 8 3 8 3 9

திருப்புகழமிர்தம் Regd. No. M. 3487

Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.



Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodanan Sivam, 89, Sirganna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5